9th September 1958]

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : இப்போது கிராமாந்திர டிஸ்பென்ஸரிகளுக்கு மருந்துகள் மிகக் குறைவாகக் கொடுக்கப்படுகின்றன. இனிமேல் கிராமாந்திர வைத்தியசாலைகளுக்கு மருந்துகளை அதிகமாகக் கொடுத்து, கிராம மக்களுக்கு போதிய வைத்திய வசதி செய்து கொடுக்க அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

MR. SPEAKER : மூலக் கேள்வி டாக்டர்களின் சம்பளத்தைப் பற்றியது. மருந்துகளைப் பற்றி நீங்கள் உப கேள்வி போட்டிருக்கிறீர்கள். இதற்கு கனம் அமைச்சர் எப்படி பதில் சொல்ல முடியும் ? கனம் அமைச்சர் பதில் சொல்வாரானால், எனக்கு ஆட்சேபணை இல்லை.

THE HON. SRI M. A. MANICKAVELU : மூலக் கேள்வி மருந்துகளைப்பற்றியது அல்ல.

SRI D. S. AUTHIMOOLAM : எல்லா ஜில்லாக்களிலுள்ள கிராமாந்திர ஆஸ்பத்திரிகளுக்கு அதிக ஸப்ஸிடி கொடுக்கப்பட வேண்டுமென்ற கோரிக்கை சென்ற பத்து வருஷ காலமாக இருந்து வருகிறது. அப்படியிருக்கும்போது, இந்த ஸப்ஸிடியை அதிகப்படுத்த வேண்டுமென்று சர்க்கார் தீவிரமாக எண்ணுகிறதா, இல்லையா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அவ்வாறு சர்க்கார் எண்ணுவதுமட்டும் போதாது, ஜில்லா போர்டுகளும் அவ்வாறு எண்ணினால்தான் அதிக ஸப்ஸிடி கொடுக்க முடியும்.

SRI P. S. CHINNADURAI : போதிய சம்பளம் கொடுக்கப்படாததால் கிராமங்களுக்குச் செல்வதற்கு டாக்டர்கள் முன் வராமல் இருக்கிறார்கள் என்பது தங்களுக்குத் தெரிந்திருந்தும், அரசாங்கத்தார் பணம் இல்லை என்ற காரணத்தைக் காட்டி அவர்களுடைய சம்பளத்தை அதிகரிக்கத் தயங்குவது, கிராம மக்களுக்கு நன்மை செய்வதாகுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கிராமாந்திர டாக்டர்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளம் போதுமானது அல்ல என்பது இப்போதைய பிரச்னை. இந்தக் குறைவை நீக்குவதற்கு யோசனை செய்யப்பட்டு வருகிறது. ப்ரைமரி ஹெல்த் ஸெண்டர்களிலுள்ள டாக்டர்களுக்கு முன்பு 50 ரூபாய் "நான்-ப்ராக்டிஸ் அலவன்ஸ்" கொடுக்கப்பட்டு வந்தது. இப்போது அந்த அலவன்ஸை 100 ரூபாயாக உயர்த்தியிருக்கிறோம். பிரச்னையைத் தீர்ப்பதற்காக காரியங்களை இம்மாதிரி கொஞ்சம் கொஞ்சமாகச் செய்து வருகிறோம்.

SRIMATHI A. S. PONNAMMAL : கிராமங்களில் உள்ள ஆஸ்பத்திரிகளில் வேலைபார்க்கும் டாக்டர்கள் கிராம மக்களிடமிருந்து பணம் வாங்கிக் கொள்கிறார்கள் என்று புகார் செய்யப்படுகிறது. கிராம ஆஸ்பத்திரி டாக்டர் ஒருவர் அம்மாதிரி பணம் வாங்கியதாக என்னிடம் புகார் செய்யப்பட்டதன்பேரில் நான் அவரை அதுபற்றி விசாரித்ததற்கு, அவர் "நாங்கள் என்ன செய்வோம் ? எங்களுக்கு பிள்ளை குட்டிகள் அதிகமாக இருக்கின்றன. எங்களுக்கு இன்னும் கொஞ்சம் அதிகம் சம்பளம் கொடுக்கப்பட்டால், இம்மாதிரி மக்களிடமிருந்து பணம் வாங்கமாட்டோம்" என்று சொன்னார். எனவே, கிராமாந்திர டிஸ்பென்ஸரிகளிலுள்ள டாக்டர்களுக்கு இன்னும் 25 ரூபாயாவது அதிகமாகச் சம்பளம் கொடுக்கப்படுமானால், நான் அந்த டாக்டர்கள் சார்பில் அரசாங்கத்திற்கு நன்றி செலுத்துவேன் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

MR. SPEAKER : அப்படிக் கூறிப் பிரயோஜனம் இல்லை. "இது பற்றி அரசாங்கம் யோசிக்குமா ?" என்று கேள்வி போடுங்கள். (சிரிப்பு.)

## *Salaries and Allowances*

* 114 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் ரெவினியூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

கவர்ன்மெண்டு ஆஸ்பத்திரிகளிலே வேலை செய்யும் கடைநிலை ஊழியர்களான தோட்டிகளுக்கு (வார்டுகளைச் சுத்தம் செய்பவர்களுக்கு) எந்த அடிப்படையில் சம்பளம், அலவன்ஸ் கொடுக்கப்படுகின்றன ?

[9th September 1958

**THE HON. SRI M. A. MANICKAVELU:** The scale of pay and allowances for the toties in the Government hospitals have been fixed with reference to the nature and responsibilities attached to their posts.

**SRI S. B. ADITYAN:** சென்னை சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் வேலை செய்யும் ஊழியர்களுக்கு வாரத்திற்கு ஒரு நாள் ஓய்வு கொடுக்கப்படவேண்டும் என்று அரசாங்கம் 1950-ம் வருஷம் உத்தரவிட்டது. அந்த உத்தரவு சரிவர அமல் நடத்தப்படும் என்று கனம் அமைச்சர், சென்ற ஆண்டு இந்த சபையில் உறுதி கூறினார். ஆனால், சென்னை நகரிலுள்ள ஜெனரல் ஆஸ்பத்திரியில் வேலை செய்யும் கடைநிலை ஊழியர்களுக்கு அந்த உத்தரவின்படி கொடுக்கப்பட வேண்டிய ஓய்வு இன்று வரையில் கொடுக்கப்படுவதில்லை. இதை கனம் மந்திரி அருள்கூர்ந்து கவனிப்பாரா ?

**THE HON. SRI M. A. MANICKAVELU:** ஆஸ்பத்திரிகளில் வேலை செய்யும் தோட்டிகள் முதலிய ஊழியர்களைப்பற்றியது மூலக் கேள்வி. அந்த ஊழியர்கள் " கண்டிஜெண்ட் எஸ்டாப்ளிஷ்மெண்ட் "-ல் இருந்து வந்தார்கள். இப்போது அவர்கள் " ரெகுலர் ஸெர்விஸில் " எடுத்துக் கொள்ளப்பட்டு, லீவ், அலவன்ஸ் முதலிய சலுகைகள் கொடுக்கப்பட்டிருக்கிறார்கள். அவர்களுக்கு குடக்கூலி அலவன்ஸும் கொடுக்கப்படுகிறது. ஆகையால் அவர்களுடைய நிலை முன்பு இருந்ததைவிட ஓரளவு இப்போது உயர்ந்திருக்கிறது. மற்றப்படி, அவர்களுக்கு இன்னும் சலுகைகள் கொடுக்கப்பட வேண்டும் என்று கூறப்படுமானால், அது சம்பந்தமாக எந்த உறுதி மொழியும் கூறுவதற்கு இப்போது நான் தயாராக இல்லை.

**SRI S. PAKKIRISAMI PILLAI:** சர்க்கார் ஆஸ்பத்திரிகளிலுள்ள தோட்டிகள் இப்போது முழுநேர ஊழியர்களாக இருக்கும்போது, அவர்களுக்குக் கிடைக்கும் மொத்த மாத வருமானம் எவ்வளவு ? அத்தகைய ஊழியர்களின் குறைந்தபட்சச் சம்பளம் (தொழில்) கோர்ட்டுகளால் நிர்ணயிக்கப்பட்டிருக்கும்போது, அரசாங்கத் தோட்டிகளுக்கு அந்த அளவைவிடக் குறைவாக சம்பளம் கொடுக்கப்படுமானால், அதை ஒரு பெரிய குற்றமாக அரசாங்கத்தார் கருதவில்லையா ? அப்படிப்பட்ட குற்றம் செய்யப்படாமலிருப்பதற்கு அரசாங்கத்தார் உடனடியாக நடவடிக்கை எடுப்பார்களா ?

**THE HON. SRI M. A. MANICKAVELU:** இப்போது, " மாக்ஸிமம் டைம்-ஸ்கேல் " சம்பளத்தை அடைந்தவர்களுக்கு, நகரத்தில் 57 ரூபாயும் நகரத்திற்கு வெளியில் 53 ரூபாயும் மாதச் சம்பளம் கிடைக்கிறது.

**SRI S. NAGARAJA MONIGAR:** " தமிழர்கள் வாழ வேண்டும், நாம் தமிழர், நம் தமிழர்கள் முன்னுக்கு வர வேண்டும் " என்று சொல்லப்பட்டு வரும் இந்தக் காலத்தில், ஆஸ்பத்திரிகளில் கீழ்த்தர வேலை செய்யும் ஊழியர்களில் பெரும்பான்மையோர் வடக்கத்தியர்கள் என்பதும் அவர்கள் தெலுங்கு பேசுபவர்கள் என்பதும் சர்க்காருக்குத் தெரியுமா ?

**THE HON. SRI M. A. MANICKAVELU:** அவர்கள் தெலுங்கு பேசினாலும் பச்சைத் தமிழ் நாட்டில் தான் வசிக்கிறார்கள். (சிரிப்பு.)

**SRI M. JAGANNATHAN:** சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் வேலை செய்யும் கடைநிலை ஊழியர்கள் சங்கத்திடமிருந்து, அவர்களுடைய சம்பளத்தை உயர்த்தக் கோரி, சர்க்காருக்கு ஏதாவது மனு வந்திருக்கிறதா ? அப்படி வந்திருந்தால், அதன்பேரில் சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறார்கள் ?

**THE HON. SRI M. A. MANICKAVELU:** சம்பள உயர்வு கோரி நிறைய மனுக்கள் வருகின்றன. ஆகையால், கனம் அங்கத்தினர் குறிப்பிட்ட மனு வந்ததா, இல்லையா என்று நான் கவனிக்கவில்லை. (சிரிப்பு.)